# கைக்கு எட்டியது

"**பா**ழாய்ப்போன பூனை உள்ளே நுழையும் என்று சொன்னால் கேட்டால்தானே. இப்போ பாருங்கள் அது செய்கிற அமர்க்களத்தை'' என்று முணுமுணுத்துக் கொண்டே மரகதம், பக்கத்திலிருந்த கணவனை எழுப்பினாள். தலையணைதான் அவள் கரத்தில் தாண்டவமாடிற்று. கைக்கு எட்டிய எலி வாய்க்கு எட்டவில்லையே என்று கவலையுடன் ஒரு கருப்புப்பூனை ஓடிற்று.

ஓஹோ! சங்கதி இப்படியா? தலையணையை வைத்து விட்டு அவர் எங்கேயோ போய்விட்டார். வரவர அவர் குணம் கெட்டுக்கொண்டே வருகிறது என்று சொல்லிக் கொண்டே மரகதம் கவலையுடன் இருந்தாள். கந்தசாமி அதே நேரத்தில் இருக்கும் ''குஷி'' மரகதத்துக்கு என்ன தெரியும்!

கந்தசாமிக்கு நெடு நாட்களாக ஒரு ஆசை, அதைத் தூண்டி விட்டவன் அவன் நண்பன் கோபாலன். ஒவ்வொரு தினமும் கோபாலனைச் சந்திக்கும் போது அவன் ஒரு புது ''லீலை''யைப் பற்றித்தான் பேசுவான்.

''அடடா! என்ன ஜோர்! எவ்வளவு குஷி!''

''மகாகுஷி! எதைக் கண்டாய்.''

''கண்டேன்! கண்டேன்! கண்டேன். காமனையும் மயக்கும் கன்னியைக் கண்டேன் – கண். . .''

''பாட்டை நிறுத்து. பெரிய ரம்பையைத்தான் கண்டு விட்டாய்.''

''கந்தா, உனக்குத் தெரியாது. உண்மையைச் சொல்லுகிறேன், நான் கோமளத்தைப் பலமுறை பார்த்திருக்கிறேன். ஆனால் அவளுடைய கொவ்வைக் கனியின் ரசத்தை, முகவிலாசத்தை, பேச்சின் சுவையை லீலா விநோதத்தை நேற்றே உண்டேன்.''

''விஷயத்தைச் சொல்லேண்டா, மதனகாம ராஜன் கதை சொல்லாதே.''

''அப்படியானால் கேள். . .''

ஒவ்வொரு நாளும் கோபாலன் விதவிதமாக ஒரு லீலை பற்றிக் கூறுவான். கந்தசாமிக்குச் சபலம் தட்டிற்று. தான் என்ன செய்வது? காசு கிடையாது. வெட்டிப் பேச்சுப் பேசுவது தவிர வேறு வேலையும் கிடையாது.

பென்ஷன் பரசுராம முதலியார் குடும்ப மானேஜ்மெண்டும் பார்த்து வந்தார். பையன் ஒன்றுக்கும் உதவாதவனாகி விட்டான் என்பது கவலை. வேளைக்குச் சோறு, வெளியே போய் வந்ததும் வேலை தேடிப் பார்ப்பதாக அகவல், பிறகு இருக்கவே இருக்கிறது, மனைவியிடம் மங்களாபிஷேகம்.

இந்த நிலையிலும் கந்தசாமியின் நினைப்பு, கோபாலன் கூறி வரும் லீலைகளில் ஒன்றையாவது ஒருநாளாவது அனுபவிக்க வேண்டும் என்பது.

''ஒரு நாள் ஒரு பொழுதாவது உன்னைக் காண வேண்டும், ஓ மானே'', என்று மனதிலே பஜனை நடத்தி வந்தான். பூனைக்கு கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாதுபோன அன்றுதான், கந்தசாமி கைக்கு, மரகதத்தின் கழுத்துச் சங்கிலி எட்டிற்று. அதை எடுத்துக் கொண்டுதான் அவன் கிளம்பி விட்டான். என்ன துரோகம், என்ன துரோகம் என்பீர்கள். என்ன செய்வது அவன் அவ்வளவு பித்து பிடித்தவனானான்.

கோபாலன் குறிப்பிட்ட ''மாதுகள்'' பலப்பல இரவு 9 மணிக்கு எப்படி போவது, எப்படிப் பேசுவது, சங்கிலியைக் கொடுத்தால் என்ன எண்ணுவாளோ என்ற எண்ணம் கந்தசாமியின் மனதைக் குடைந்தனவேயொழிய, மரகதத்தின் மனது எவ்வளவு துடிக்கும், தகப்பனார் எவ்வளவு வருத்தப்படுவார், ஊராருக்குத் தெரிந்தால் எவ்வளவு ஏசுவார்கள் என்ற எண்ணமே எழவில்லை. அவன் மனதிலே ஒரே ஜ்வாலை. தனது ஆசையைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டுமென்ற பித்தம் தலைக்கேறி விட்டது. அவன் மட்டுந்தானா! கொடிய இந்த உலகில் சுகம்தேடும் எவரும், பிறரிடம் மனம் என்ற வஸ்து இருப்பதாகவா நினைக்கிறார்கள். தாலிச் சரட்டில் கோர்த்திருக்கும் தங்கம் ''வட்டிக்கு வட்டி''யாக. . . கனதனவான்கள் இல்லையா இவ்வுலகிலே. காயும் வெயிலிலே கைவண்டியை காலும் கழுத்தும், இடுப்பும் முறிய இழுத்து வரும் கூலியாளிடம் நியாயமான கூலியைத் தராமல் பாடு பட்டதற்குத் தக்கது கேள், அதிகத்துக்கு ஆசைப்படாதே. ஆண்டவன் கொடுத்து வைத்தது அளவுதான்;

கிடைக்கச் செய்வான்'' என்று 'தர்மோபதேசம்' செய்து, ஆறணாவுக்கு ஐந்தணாக் கொடுத்து, அந்த ஒரு அணாவைத் தன் சமர்த்தால் வந்த சம்பாத்தியம் என்று எண்ணிக் களிக்கும் – கனவான்கள் இருக்கும் உலகுதானே. மரகதத்தின் சிரிப்பிலே கந்தசாமி சொக்கிய காலமுண்டு. ஆசைக்கு ஏற்றவளாக அவள் இருந்த நாள் உண்டு. அவள் மனம் கோணாமல் நடப்பதே அவனுக்கு இஷ்டமாக இருந்ததுண்டு. ஆனால் 'லீலை' மீது மோகம் தோன்றியது. தன் மனதிலே உண்டாகிய ஆசையைப் பூர்த்தி செய்து கொள்ள அவன் தன் தங்கத்தின் தங்கச் சங்கிலியைத் திருடவும் துணிந்தான்.

காமம் பிடித்தவனுக்குக் கண்மண் தெரியாது என்று சொல்வார்கள். காமம் பிடித்தவன் மட்டுமல்ல யாருக்கு எந்த எண்ணம் வெறிபோல் பிடித்துக் கொண்டாலும் அவர்களுக்கு மற்றவை கண்ணுக்குத் தெரியா. கந்தசாமி கோபாலன் வீட்டுக் கதவைத் தட்டித் தட்டி அலுத்தான். அவன் எங்குப் போனானோ! எந்த லீலையில் இருந்தானோ யார் கண்டார்கள். கதவு திறக்கப் பட்டுக் கடுமையான பதில் கிடைத்தது. ''வெளியே போனார், எப்போ வருவாரோ தெரியாது'' என்று.

கந்தசாமி யோசித்தபடியே நடக்கலானான். கைக்கெட்டியது வாய்க்கு எட்டாது போலிருக்கிறதே என்ன செய்வது; எங்கே போவது, என்று எண்ணி எண்ணி அலுத்தான்.

* * * * *

''உன் மூஞ்சி இருக்கிற அழகுக்கு முக்காலணா கொடுப்பானா எவனாச்சும். முகரக்கட்டையைப் பார்''

''அட! என் மன்மதக் குரங்கே. நீ கெட்ட கேட்டுக்கு கேலி வேறே செய்யறையா. டிகிரி அதிகமா''

''சரி! சரி, போய்ப்படு. இன்னிக்கி எவனும் சிக்க மாட்டான்.''

''எவன் வருவான். தடிக்கட்டை மாதிரி பக்கத்திலே நீ நிற்கச்சே, போறவன் வாரவன் உன்னைப் பார்த்து விட்டுப் போயிடுவான். போய் நீ படுத்துத் தொலை. வீட்டுக்காரிக்கு வாடகை பாக்கி 9 ரூபா கொடுக்கணும். வாயிலே வந்தபடி பேசுகிறாள். மானம் போகுது''

''மானம் போகுதா! உனக்கா, ஏ, அப்பா, மானம் என்றால் மணங்கு என்ன விலை என்று கேட்கறவ நீ. மானம் போச்சுன்னு பேசறியே. பேஷ், ஏது கொல்லன் பட்டறையிலேயே ஊசி விக்கறயே''

''சரி, நீ, கத்த படிப்பைக் குப்பையிலே போடு. அதோ யாரோ வருகிறாப்போல இருக்கு பார்த்துச் சொல்லு''

கிராக்கிக்கு, காத்துக் காத்து வேர்த்துப்போன வேதத்துக்கும், குடித்துக் குடித்து வெறித்துப்போன வேலனுக்கும் இந்தச் சம்பாஷணை நடந்து கொண்டிருக்கிறது. வீதியிலே இரண்டொரு வீடுகள் தவிர மற்றவை மூடப்பட்டிருந்தன. வேதம்போல், ''விதி''யின்படி வீதியிலே நின்று வாழ்க்கைக்கு வழி தேடும் சிலர் தவிர மற்றவர்கள், அதே நேரத்தில் ஆசை நாயகனுடன் கொஞ்சிக் கொண்டோ அடுத்த வீட்டுக்காரியுடன் உனக்கென்ன சரசம் என்று கேட்டு ஊடலாடிக் கொண்டோ, ஆடுதன் இரண்டடி நூறு என்று சொல்லி சீட்டாடிக் கொண்டோ, ஆறு சவரனில் ஒரு வளையல் கேட்டேன் அதற்கு வழியில்லை, ஆசை மட்டும் சொட்டுகிறதோ என்று ஆயாசத்துடன் பேசிக்கொண்டோ, மஞ்சத்தின் மீது இருக்கும் நேரம்.

வேதம் அதுபோல் இருந்த காலமும் உண்டு. வேலனை போன்றவர்கள் கிட்டே நெருங்காத காலம். முகத்திலே சுருக்கம் விழாத காலம். இளமையும் அழகும் தாண்டவமாடிய காலம்.

இப்போது வேதத்துக்கு வயதாகி விட்டது. முப்பது வயதுக்காரி. முகத்தை (பவுடர் இல்லாத நேரத்தில்) பார்த்தாலோ நாற்பதுக்கு மதிப்பிடுவார்கள். அந்தக் கிழட்டுச் சாயல் வந்ததற்குக் காரணம், அவளுடைய இளமையை அவள் மிக மிகத் தாராளமாகக் காமாந்தகாரர்களின் உலகுக்கு விருந்தாக அளித்தது தான்.

வந்ததெல்லாம் போய் வருவாய்க்கு வழி இல்லாத காலம் வேதத்துக்கு. வருகிறவன் சின்னஞ்சிறுசுகளைத் தேடுகிறான். சிரிப்பு குலுக்கு இருக்கிறதா என்று பார்க்கிறான். இது சுத்த அடாசு என்கிறான். வேதனையான வாழ்க்கை வேதத்துக்கு. ஆம்! அந்த உலகில், ஆயிரக்கணக்கான வேதம் இருப்பார்களல்லவா.

தேடித் திரிந்து வரும் கந்தசாமி, காத்துக் கால் கடுக்க நிற்கும் வேதத்தின் முகத்தை, அவள் பூசியிருந்த பவுடரின் உதவியினால் கண்டான். . . வேதம் கனைத்தாள், வேலன் சிரித்தான், கந்தசாமி சற்று நின்றான்.

''ஆசாமி புதுசு போலிருக்கு வேலா போய் அழைத்து வா'' என்றாள் வேதம்.

வேலன் போனான். ''எங்கேயோ பார்த்தமாதிரி இருக்கே.''

''என்னையா? ஊஹூம். இல்லை!''

''இல்லை! எனக்கு நல்லா கவனம் இருக்கு. நீங்க, எதிர் வீட்டு எதிராஜா வீட்டுக்கு வந்திருக்கிறீர்கள்.''

''கிடையாதே. இம்மாதிரி வழக்கமே எனக்குக் கிடையாது, இன்றைக்குத்தான் என்னமோ ஒரு மாதிரியாக இருந்தது.''

''இது சகஜந்தானுங்களே. என்னமோ விஸ்வாமித்திரர்கூட ஒரு மேனகையைக் கண்டு மயங்கினாரு என்று கதை சொல்வாங்களே. உலகிலே இது நடப்பதுதானே'' என்றாள் வேதம்.

வேலன், வெளியே போய் ''சா'' சாப்பிட வேண்டும் என்றான்.

''அண்ணன் வெளியே போக வேண்டுமாம். போய்த் தொலைக்கட்டும், நாம் நிம்மதியாக இருப்போம்'' என்று கூறிக் கொண்டே சிரித்தாள் வேதம். கந்தசாமியும் கூடச் சிரித்தான். வேதம் சிரித்தபோது அவளுடைய பற்களிலே இரண்டொன்று இல்லாமற் போனதைக் கண்டான். மனம் ஒருவிதமாகி விட்டது.

''என் வேதம்! சா குடிக்கணும், காது கேக்கலே'' என்று வேலன் கத்தினான்.

''அட கொஞ்சம் இரு அண்ணே அவர் காசு எடுப்பதற்குள் சத்தம் போடறயே'' என்று வேலனுக்கு சொல்லிக்கொண்டே ''ஏதாவது சில்லறை இருந்தால் கொடுங்கோ இந்தச் சனியனைத் தொலைச்சிடுவேன்'' என்று கந்தனைக் கேட்டாள்.

''சில்லறை இல்லையே'' என்றான் கந்தன்.

''ரூபாயாக இருக்கா?''

''இல்லை.''

''நோட்டா இருக்கா''

''இல்லை.''

''என்னய்யா விளையாடுறிங்களா'' காசை எடுங்க. அண்ணனுக்கும் கொடுக்கணும். நமக்கும் ஏதாச்சும் போடணும் பாலை காய்ச்சினேன் கொட்டிவிட்டது.''

''இதோ பார், இதுதான் இருக்கு'' என்று சொல்லிக் கொண்டே கந்தசாமி சங்கிலியை எடுத்துக் காட்டினான்.

''செயினா? ஏது இது?''

''ஏன்? என்னுடையதுதான்.''

''உன்னுடையதா? இதை எடுத்துக்கொண்டு வருவானேன்.''

''பணம் இல்லை. பணத்துக்குப் பதிலாக இதைத்தான் வைத்துக் கொள். சில நாட்களுக்கு நான் இங்கேயே இருக்கப் போகிறேன். செலவுக்கு இது போதாதா?''

''நிஜத்தைச் சொல்லு, இதை எங்கிருந்து திருடினாய்.''

''என்ன திருட்டா?''

''யார் சொத்தைத் திருடினாய் நிஜத்தைச் சொல்லு?''

''சத்தியமாக எங்கள் வீட்டுதுதான்.''

''உங்க அம்மாவுதா?''

''இல்லை''

''உமது ம. . .?''

''ஆமாம். . .''

''கொஞ்சம் இருங்கோ வருகிறேன்.''

''தங்கச் சங்கிலியை வீட்டிலிருந்து திருடிக் கொண்டு வந்திருக்கிறான். பாவம் அவனும் இளையவன். அவன் மனைவி சின்னஞ்சிறு பெண்ணாகத்தான் இருப்பாள். அவள் தன் திருட்டுக் கணவனை எண்ணி கஷ்டப்படுவாள். அவள் மனம் கஷ்டப்பட்டு எவ்வளவோ பாபத்தைச் செய்யத்தான் இந்த ஜன்மத்திலேயே மானங்கெட்ட பிழைப்பு நடத்துகிறேன். இன்னமும், இது இப்படியே போனால் அசட்டுப் பேர்வழிகள் வீட்டாரின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வேன். நல்ல கதியே கிடைக்காது. ஆகையால் அவனை, வீட்டுக்கு அனுப்பி விடப்போகிறேன்'' – என்று வேலனிடம் சொன்னாள். அவள் பேசியதிலிருந்தே, தான் எது சொன்னாலும் அவள் ஒப்புக் கொள்ளமாட்டாள் என்று வேலனுக்குத் தெரிந்துவிட்டது. அவள் மனிதத்துவம் பேசினதாலேயே மனம் இரங்கவில்லை. எவன் குடும்பம் கெட்டால் நமக்கென்ன என்னும் அளவுக்கு அவன் துணிந்தவன். கடனுக்கு மார்வாடியிடம் நமக்காக மட்டும் நாலாயிரம் கொடுத்துவிட்டு, கடைசியில் முதலும் கோர்ட்டு செலவுக்குமாக, வீடு, மாடு, கன்று யாவையும் மார்வாடியிடம் அழுதுவிட்டு, சத்திரத்திலே தங்கி, சாவடியிலே வேலை பார்த்து வந்தவனின் பிள்ளை வேலன். உலகிலே பிழைக்க வழி தேடித் தேடி கிடைக்காமல் ரௌடியானவன். அவன் மனதிலே ஒரு காலத்தில் ஈவு, இரக்கம், தயை இருந்தன. பிறகு, உலகில் அவன்

பட்ட கொடுமைகள் ஒவ்வொன்றாக அவைகளைப் போக்கி விட்டன. அவன் மனதிலே, கோபம், துவேஷம், வெறுப்பு, சூது இவைகளே குடிகொண்டன. ஆகவே கந்தசாமியின் தங்கச் சங்கிலி மட்டுமல்ல. அவன் கழுத்தைத் திருகி அடகு வைக்க முடியு மானாலும் அவன் தயார். ஆனால் வேதம் சொன்னதிலிருந்து வேலனுக்கு ஒரு பயம் உண்டாகி விட்டது. போலீசுக்கு, இந்தப் பயலின் தந்தை கேஸ் கொடுத்தால் ஆபத்தாக முடியுமே என்று பயந்தான். பிறகே வேதத்தின் சொற்படி கந்தனை வெளியே அனுப்பச் சம்மதித்தான். "என்ன செய்யலாம் வேலா? கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை" என்று வேதம் கூறிக் கொண்டே, வீதி வாயிற்படிக்கு மீண்டும் போய் நிற்பதற்காகத் தலைமயிரை வாரிவிட்டு, கலைந்த பவுடரைச் சரிப்படுத்திக் கொண்டிருந்தாள். ரூமுக்குள்ளே, மிரள மிரள விழித்தபடி இருந்தான் கந்தசாமி.

"ஏ, அப்பேன்! இப்படி வா வெளியே" என்று வேலன் கூப்பிட்டான்.

*"யாரை? என்னையா?"*

"ஆமாம், ஆமாம்! உங்களைத்தாங்க சார், தங்கச்சங்கிலி மாஸ்டரைத்தான்" என்றான் வேலன். அவன் குரலிலே கேலியும் கோபமும் குழைந்து வெளிவந்தன. கந்தசாமி பயந்து விட்டான். பேச நா வரவில்லை. வெளியே வந்தான் "மரியாதையாக வீட்டுக்குப் போய் சங்கிலியைக் கொடுத்துவிடு. இப்படி தலைகால் தெரியாமே, வீட்டுச் சொத்தைத் திருடுவது வயிற்றுக்கில்லா தவர்கள் அதை வாங்கிக் கொண்டால், அவர்கள் மீது போலீசார் பாய்வது இதுதானே நடக்கிறது. தடியனாட்டமா இருக்கறயே, உனக்குப் புத்தி இல்லை. கையிலே காசு இருக்கணும் இந்த மாதிரி இடத்துக்கு வரணும். நகையைத் திருடிக் கொண்டா வருவது, போ, போ, ஆளைப் பார்த்தா ஒழுங்காகத்தான் இருக்கே போ' என்று அதட்டினான். வெட்கமும் துக்கமும் நெஞ்சை அடைத்துக் கொண்டது. கந்தன் கால் தடுமாறத் தடுமாற நடந்து அந்த வீட்டைவிட்டு வெளியே சென்றான். வேலன் கூறிய வார்த்தைகள் ஒவ்வொன்றும் அவன் இருதயத்தைத் துளைத்தன. கேவலம் குச்சக்காரி வீட்டு மேஸ்திரிக்கு இருக்கும் புத்தியும் தனக்கு இல்லையே என்று வருந்தினான். வேதம் எவ்வளவு நல்லவள் என்று பாராட்டினான். பெரியதோர் ஆபத்திலிருந்து தப்பினோம். ஆகவே கோயில் சென்று கும்பிட்டுத் திரும்ப வேண்டும் என்று

ஓர் யோசனை தோன்றிற்று. ஆண்டவனேதான் நான் வழுக்கி விழ இருந்தபோது, என்னைத் தடுத்து ஆட்கொண்டார் என்று கருதினான். பக்தி மேலிட்டால் அவன் கண்களில் நீரும் தளும்பலாயிற்று. ''ஆஹா, ஒரு குச்சக்காரிக்கு கிடைத்ததே இந்தப் பாக்யம்'' என்று மெள்ளக் கூறிக் கொண்டே, திருக்கோயிலை நோக்கித் தள்ளாடி நடந்தான். அகாலத்திலே ஆலயம் பூட்டப் பட்டிருக்கும், அனாதரட்சகர் என்று ஆண்டவனை அர்ச்சிப்பார்களே தவிர, ஆலயத்திலே ஆபரணங்கள் இருப்பதால், கோயிலைப் பூட்டித்தான் வைப்பார்கள், என்பது பாதிராத்திரியில் பக்தனானவனுக்குத் தோன்றவில்லை. எப்படியாவது எம்பெருமானைத் தரிசிக்க வேண்டும் என்று துடித்தான்.

அதே வேளையில், கோயில் அர்ச்சகர் கிருஷ்ணய்யங்கார் ஆண்டாள் தரிசனத்துக்காக, ஆடையாபரண அலங்கிரதராகி, புஷ்பஹாரங்களைப் பக்தியுடன் ஏந்திக் கொண்டு, ஆனந்தமாக, பெருந்தேவித் தாயார் சன்னதியை இழுத்துப் பூட்டிக் கொண்டு கிளம்பினார். பெருந்தேவித் தாயார் சன்னதி அர்ச்சகரின், அன்றைய வருமானம் மூன்று ரூபாய் எட்டணா, முடி போட்டாகி விட்டது. கோயில் கதவைப் பூட்டிவிட்டு, விக்ரகத்தின் மீது புரண்டு கிடந்த பூமாலைகளுடன் கிருஷ்ணய்யங்கார், ஆண்டாள் எனும் தன் அபிமான ஸ்திரியின் வீட்டிற்குக் கிளம்பும் நேரத்தில், அர்த்தராத்திரியில், அதிசய அனுபவத்தால் பக்திமானான ஆசாமி குறுக்கிட்டு, ''ஸ்வாமீ, பெருந்தேவியைத் தரிசிக்க வேண்டும். கோயில் திறக்க முடியுமோ?'' என்று கேட்டான். பார்த்தார் அர்ச்சகர், 'இந்த வேளையிலே, இவ்வளவு அவசரமாக வருகிறவன், திருமங்கையாழ்வாரோ?' என்று சந்தேகந் தோன்றி விட்டது.

''அகாலத்திலேயா, தெரிசனம்? விடிந்ததும் வாருமே. கோயிலைப் பூட்டிவிட்டேன், திறக்கக்கூடாது'' என்று அர்ச்சகர் கூறினார்.

''ஸ்வாமீ, நான் மிகுந்த ஆசையுடன் ஓடோடி வந்தேன். ஒரு பெரிய ஆபத்து, மலைபோல் வந்தது, பனி போல் நீங்கி விட்டது. மகா பாபக் கிருத்யம் செய்ய இருந்தேன். பகவத் கடாட்சத்தாலே, தப்பினேன். மீளா நரகத்திலிருந்து என்னைக் கரையேற்றின எம்பெருமானை உடனே சேவித்து, அர்ச்சித்துக் கொண்டுதான் வீடு போகவேண்டும் என்று பிரதிக்னை செய்து கொண்டேன்'' என்று கூறினான்.

அர்ச்சகர் யோசித்தார், ஆசாமி சுத்தப் பித்துக்கொள்ளி போலிருக்கிறது, சரியான தொகை தட்டலாம் என்ற சபலம் தட்டிற்று.

''கலிகாலமானாலும், இப்போதும் பக்திமான்கள் இல்லாமலா பொழுது விடிகிறது. ஐயா! நீர் வாலிபப் பருவமாக இருக்கிறீர், இவ்வளவு பக்திமானாகவும் இருக்கிறீர், இன்று கோயில் ஆட்கள் பொழுதோடே வீடு போய் விட்டார்கள். நான் நெடு நேரம் சேவார்த்திகளுக்காகக் காத்திருந்து தூங்கி விட்டேன். தேவி சன்னதி சேவையின்போது, இந்தப் பாபிக்குத் தூக்கம் வந்ததே என்று எண்ணி மிகச் சங்கடப்பட்டேன், இப்போதுதான் அது பகவத் சங்கற்பம் என்று தெரிகிறது. நான் தூங்கிவிட்டு, வழக்கத்தைவிட நேரம் கழித்துக் கோயிலை விட்டுப் புறப்பட வேண்டும், அந்த நேரத்திலே நீர் இங்கு வரவேண்டும் என்று பூர்வ ஏற்பாடு இருக்கிறதே; அது நடவாமற் போகுமா? சரி, வாரும் உள்ளே போவோம்'' என்று அர்ச்சகர் கூறிக் கதவைத் திறந்து சிறுவிளக்கை முதலிற் கொளுத்தி, அதைக் கொண்டு பெரிய விளக்கைக் கொளுத்தி, மூலஸ்தானத்திற்குச் சென்றார், பக்தர் பின் தொடர. பெருந்தேவித் தாயார் இருந்த கோலத்தைக் கண்டார். பெருங் கூச்சலிட்டார், பக்தனும் பதறிக் கூவினான்.

பெருந்தேவி விக்ரகத்தின், கழுத்திலே கட்டப்பட்டிருந்த தாலி, மாலை, காதிலே இருந்த ஓலை, கைவளை இவ்வளவையும் களவாடிய ஓர்கள்ளன், பக்தனும் அர்ச்சகனும் உள்ளே நுழைந்த அதே சமயம், சிலைக்கு உடுத்தப்பட்டிருந்த சேலையை அவிழ்த்துக் கொண்டிருந்தான்.

அர்ச்சகனும் பக்தனும் அலறினதும். . . வஸ்தராபரண சீலையைக் களைவதை நிறுத்திக் கொண்டு அங்கே கிடந்த பாத்திரத்தை எடுத்து ஓங்கி அர்ச்சகன் தலையிலே அடித்து, பக்தனைக் கீழே உருட்டி, அவன் மடியிலிருந்து விழுந்த தங்கச் சங்கிலியையும் எடுத்துக் கொண்டு ஓடிவிட்டான். கா கூவெனக் கூவிக் கொண்டே இருந்தனரே தவிர இருவரிலே ஒருவருக்காவது, திருடனைப் பிடிக்கும் துணிவு பிறக்கவில்லை. காரணம், அவன் காட்டிய கூரிய கத்தி. கோயிலுக்கருகேயிருந்த வீடுகளின் கதவுகள் திறக்கப்பட்டன, என்ன கூக்குரல், என்ன சந்தடி, ஏதோ கோயில் பக்கமாக கேட்கிறதே என்று குரல்கள் கிளம்பின, விளக்குடன் வீரர்கள் புறப்பட்டனர் கோயிலுக்குள். இரத்தம் ஒழுகும் மண்டையுடன் அர்ச்சகரும், பக்தரும், காட்சி தந்தனர். ''கோயிலுக்குள்

எவனோ புகுந்து கொள்ளையடித்தானய்யா, அது ஆச்சரியமல்ல, பல கோயில்களிலே திருடு போய்க் கொண்டுதான் இருக்கிறது. ஆனால், இந்த அர்த்தராத்திரி வேளையிலே அர்ச்சகனுக்கும் இவனுக்கும், கோயிலுக்குள் என்ன வேலை? தெரிசனம் செய்யப் போனதாக இவன் கூறுவதை யார் நம்ப முடியும்? என்று ஊர் மக்கள் மட்டுமல்ல, கோர்ட்டிலேயே கேட்டனர். கோயில் சொத்தை அர்ச்சகனும் பக்தனும் சேர்ந்து களவாடி விட்டு, சாக்குக்காகக் கூவி, எவன் மீதாவது பழி போட்டுத் தப்பித்துக் கொள்ளலாம் என்று சதி செய்தனர் என்று தர்மகர்த்தா தொடுத்த கேசில், அர்ச்சகருக்கும், அர்த்தராத்திரிப் பக்தருக்கும் ஆறுமாதக் கடுங்காவலும், ஆயிரம் ரூபாய் அபராதமும் ஜில்லா ஜட்ஜ் அம்பிகை உபவாசி அமிர்தலிங்கேஸ்வர ஐயர் விதித்தார்.

அந்தத் தங்கச் சங்கிலி, அடுத்த ஊர் சேட் கரம்சந்தின் பெட்டியிலே, பெருந்தேவியின் ஆபரணங்களுடன் தூங்கிக் கிடந்தது. பக்கா பலராம் – கள்ளனின் பல பெயர்களிலே அது ஒன்று – மிகக் குஷியாக, கந்தசாமிக்கு ஞானோபதேசம் செய்தவளிடம் கொஞ்சிக் கொண்டிருந்தான்.

''நான் அப்படி ஒன்றும் பணத்துக்கு ஆசைப்படுபவளல்ல. இதைக் கேள், ஒருநாள் இராத்திரி, ஒரு பையன் வீட்டிலே இருந்து சங்கிலியைத் திருடிக் கொண்டு, இங்கே வந்தான். அதை எடுத்துக்கோ, நான் இங்கே இருக்க வேணும்னு கேட்டான். நான் பார்த்தேன். சீ, இவன் வீட்டிலே தெரியாமே, திருடிக்கிட்டு வந்தான், இதை வாங்கினா தோஷம்னு நினைச்சி, பேசாமே வீடு போய்ப் படுடா தம்பி, இதுமாதிரி செய்யாதேன்னு சொல்லி அனுப்பினேன். இன்னங்கூட அண்ணன் சொல்லும், கைக்கு எட்டியது வாய்க்கு எட்டலையேன்னு'' என்று அவள் தன் நற்குணத்தைக் கூறிக் கொண்டிருந்தாள். பலராமன் விழுந்து விழுந்து சிரித்தான். அதன் பொருள் அவளுக்கு விளங்கவில்லை!

1943

❄ ❄ ❄ ❄ ❄